இதழ் 21 | செப்டம்பர் | 2020

# தாயகம்



## தோழர் தமிழரசன் தனியாள் அல்லர்;

# வரலாற்று இயக்கம்

# உள்ளே

1.தோழர் தமிழரசன்: தனியாள் அல்லர்; வரலாற்று இயக்கம்.

தாயகம் இதழ்-21

வெளியீடு : தமிழர் கழகம்

# தோழர் தமிழரசன்: தனியாள் அல்லர்; வரலாற்று இயக்கம்.

இது தமிழ்நாட்டு மாவீரர் மாதம். செப்டம்பர் முதல் நாளில் தோழர்கள் தமிழரசன், தருமலிங்கம், அன்பழகன், பழனிவேல், செகநாதன் ஆகிய தோழர்களின் நினைவினை ஏந்தி, செப்டம்பர் 12ஆம் நாள் தோழர் பாலனை நினைத்து, 26இல் திலீபனை எண்ணிப் போற்றிச் சூளுரைத்து தமிழ்நாட்டு விடுதலைப் போராட்டத் தீயை அணையாது காத்துக் கொண்டிருக்கும் மாதம்.

இன்று தமிழ்த்தேசியத்தின் குறியீடாகத் தோழர் தமிழரசன் திகழ்கிறார். குமுக ஊடகங்களில் தோழர் தமிழரசனின் படங்களும் புகழ்ப்பாடல்களும் நிறைந்துள்ளன. ஆளும் வகுப்பு தோழர் தமிழரசனுக்கு நினைவிடம் அமைப்பதை

இன்றுவரை தடை செய்து வந்தபோதும் பல்லாயிரக்கணக்கான தமிழர்களின் நெஞ்சங்களில் அரியணை இட்டு அமர்ந்திருக்கிறார் தோழர் தமிழரசன்..

இருந்த போதிலும், தோழரைப் பற்றிய வரலாற்றுப் பதிவுகளில் தவறுகளும், முரண்களும், தடுமாற்றங்களும் உடன் வரத்தான் செய்கின்றன. தலைமறைவு இயக்கம் மற்றும் போராளிகளின் வரலாறு முழுமையாகத் துலக்கம் பெற இயலாது என்பது ஒருவகையில் உண்மையே. விடுபாடுகளும் புனைந்துரைகளும் அவர்களைப் பற்றிய வரலாறுகளின் நிறைந்தே இருபதை நாம் உணர முடியும். ஆனாலும் தக்காரின் தொடர்ந்த முயற்சிகளினால் உண்மை வரலாற்றை நாம் கண்டடையவும் கூடும்.

தோழர் தமிழரசன் தனி மாந்தரல்லர்; ஒரு வரலாற்று இயக்கம்.

தமிழரசன் என்ற பெயரைச் சொல்லும் போதே – அவரின் படத்தைக் காணும் போதே – தமிழ்நாடு பொதுவுடைமைக் கட்சி (மா.இலெ.), தமிழ்நாடு விடுதலைப் படை, காவிரி, ஈழம், சாதி ஒழிப்பு, பாட்டாளியப் பண்பாடு ஆகியன நினைவில் எழுவதைத் தவிர்க்க முடியாது.

தோழர் தமிழரசன் இந்தியப் பொதுவுடைமைக் கட்சி (மா.இலெ., மக்கள்போர்க் குழு)யில் முன்னணி மறவராகச் செயற்பட்டு களப்பரிசாகச் சிறைத்தண்டனை அடைந்து சிறைக்குள் தம் ஆசான் புலவர் உள்ளிட்ட தோழர்களோடு தொடர்ந்து நிகழ்த்திய கருத்தாடல்களின் வழியாக தேசிய இனச் சிக்கல்களுக்கு தேசிய விடுதலையே தீர்வு என்ற முடிவினை எட்டினார். எனவே, ஈழம், காசுமீர், நாகா, மிசோரம், பஞ்சாப் ஆகிய நாடுகளின் தேசிய விடுதலைப்

போரை பாட்டாளியக் கட்சியான இ.பொ.க. (மா.இலெ., மக்கள்போர்க்குழு) ஆதரிக்க வேண்டும் என்று வலியுறுத்தினார். தன் வலியுறுத்தலை உரிய வழிகளில் கட்சியின் நடுவக் குழுவிடம் தெரிவித்தார். கட்சியின் நடுவக்குழுவோ இதை முதலாளியத் திசை விலகல் என்று புறக்கணித்தது. 'அவரிடம் நிலவி வந்த சிற்றூர்ப்புற முதலாளியப் பண்புகள் பின்னர் முதலாளியத் தேசியமாக உருவெடுத்தன' என எடையிட்டது. இந்நிலையில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பெண்ணாடம் மாநாட்டை புலவரின் வழிகாட்டலோடு நடத்திக் காட்டினார் தோழர் தமிழரசன். இம்மாநாட்டை கட்சிக் குழு கடுமையாக எதிர்த்தது. எனவே தோழர் தமிழரசன் தொடர்ந்து மக்கள்போர்க்குழுவில் செயல்பட இயலாத நிலை எழுந்தது.

தேசிய இனச் சிக்கல்களில் தேசிய விடுதலை

என்ற முடிவிற்கு வந்திருந்த போதிலும் தமிழ்நாட்டு விடுதலை என்ற நிலையை அதுவரை அடையாதிருந்த தோழருக்கு பெண்ணாடம் மாநாட்டுச் சூழல், தமிழ்நாடும் விடுதலை வேட்கையோடு இருப்பதைக் காணச் செய்தது. இந்தியாவிற்குள் தமிழ்நாடு தனக்கான தீர்வை அடைந்து விட முடியாது என்பதை உணர்ந்த தோழர் தமிழரசன் தனித்ததொரு கட்சியைக் கட்டவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டார். தமிழ்நாட்டு விடுதலைப் போராட்டத்தை இ.பொ.க. (மா.இலெ.) பெயரிலான கட்சியின் தலைமையிலேயே நடத்திவிட முடியும் என்று கருதிய தோழர் தமிழரசன் அவர்களைப் புலவர் தமிழ்நாட்டு விடுதலைக்கு தமிழ்நாட்டுக் கட்சியமைப்பே தலைமை ஏற்க இயலும் என்று வழிகாட்டி ஏற்கச் செய்தார். இந்தியக் கட்சியின் பெயரிலேயே செயல்பட

வேண்டும் என்று வலியுறுத்திய தோழர் சுந்தரம் கட்சியிலிருந்து பிரிந்து சென்றார்.

இதன் பின்னர் தமிழ்நாடு பொதுவுடைமைக் கட்சி (மா.இலெ.) தோற்றம் கண்டது. தமிழ்நாட்டு விடுதலையை வென்றடுப்பதற்கான கட்சியாக த.பொ.க. (மா.இலெ.) உருவானதன் பின்னர் அதற்கென படையணி ஒன்றைக் கட்ட வேண்டிய தேவை எழுந்தது. வடவார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த தோழர் வேலு அவர்கள் தமிழ்நாடு விடுதலைப் படை அல்லது விடுதலைச் சேனை என்ற பெயரை முன்மொழிந்தார். தமிழ்நாடு விடுதலைப் படை உருவானது.

தமிழ்நாடு விடுதலைப் படையின் தோற்றத்திற்குப் பின்னர் தமிழ்நாடு பொதுவுடைமைக் கட்சி (மா.இலெ.) தன் அரசியல் முழக்கங்களோடு அரங்கிற்கு வந்தது.

பார்ப்பனியப் பண்பாட்டைக் கட்டிக் காக்க வேண்டும் என்ற முயற்சியில் தஞ்சையில் தென்னகப் பண்பாட்டு நடுவம் என்ற நடுவத்தைத் தொடங்கி வைக்க வருகை தந்த இராசீவ்காந்திக்கு குடமுருட்டி ஆற்றுப் பாலத்தில் வெடியோசையோடு தமிழ்நாடு விடுதலைப் படை எதிர்ப்பு தெரிவித்தது. காவிரிச் சிக்கலைத் தீர்த்து உழவர்களின் வாழ்வுரிமையைப் பாதுகாக்கத் தவறிய இராசீவின் பண்பாட்டுக் காவலன் வேடத்தை மக்கள் முன் அம்பலப்படுத்தியது இந்நிகழ்வு. *1938*இலிருந்து ‘தமிழ்நாடு தமிழருக்கே’ என்று முழங்கிக் கொண்டிருந்த தமிழ்நாட்டு விடுதலை ஆர்வலர்களை கருவிப் போருக்கு அழைத்திடும் பேரோசையாகவும் குடமுருட்டி நிகழ்வு அமைந்தது. தில்லி அரசினருக்கு அது பேரச்சத்தைக் கொடுத்தது.

இந்திய அமைதிப்படை என்ற பெயரில்

ஈழத்திற்கு வல்லாளுமைப் படையை அனுப்ப முயன்ற இந்திய அரசைக் கண்டித்து அரியலூர் மருதையாற்றுப் பாலத்தில் மற்றொரு வெடிகுண்டு நிகழ்வை நிகழ்த்திக் காட்டியது. 'இந்திய அரசே! தனித் தமிழீழத்தை ஏற்றுக்கொள் (அங்கீகரி); இந்தியப் படைகளை இலங்கைக்கு அனுப்பாதே' என்று மருதையாற்று வெடிக்குரல் ஒலித்தது. அக்குரல் அக்காலத்தில் தமிழகமெங்கும் ஒலித்த பெருங்குரலாக இருந்ததைக் கண்டு இந்தியா அரண்டது.

கெடுவாய்ப்பாக, 1987 செப்டம்பர் முதல் நாள் பொன்பரப்பியில் த.பொ.க. (மா.இலெ.) மற்றும் தமிழ்நாடு விடுதலைப்படையின் முன்னணித் தோழர்கள் அனைவரும் படுகொலை செய்யப்பட்ட பின்னர் ஈழத்தின் மீதான இந்தியாவின் போர் தொடங்கியதை வரலாறு அறியும்.

ஆனால் தோழர் தமிழரசன் அழைத்த அழைப்பிற்கு விரைந்தோடி விடுதலைப் போராட்டத்தில் இணைந்த இளைஞர்களின் எழுச்சியினால் தோழர் தமிழரசனின் மறைவிற்குப் பின்னரும் தமிழ்நாடு விடுதலைப் படையின் செயல்கள் தொடர்ந்ததைப் பார்க்கின்றோம்.

தோழர் தமிழரசனின் அரசியல் நடவடிக்கைகளை வழி நடத்திய புலவர் கலியபெருமாள் அவர்கள், பண நடவடிக்கைகளில் தம் வழிகாட்டுதல்களைத் தோழர் புறக்கணிக்கின்றார் என்று கருதி சில  காலம் கட்சியின் தொடர்பற்று இருந்தார். தோழர் தமிழரசனின் இறப்புக்குப் பின்னர் இளைஞர்களின் எழுச்சிக்குத் துணையாகத் தம்மை இணைத்துக் கொண்டு மீண்டும் வழிகாட்டினார். அவ்விளைஞர்களே பின்னர் தமிழ்நாடு பொதுவுடைமைக் கட்சி

என்ற கட்சியை உருவாக்கினர்.

அதே போல் இந்தியக் கட்சியாகவே கட்சி நீடிக்க வேண்டும் என்று கருத்து தெரிவித்து ஏற்கப் படாத போது விலகிச் சென்ற தோழர் சூ என்கிற சுந்தரம் (அன்பழகன்) தோழரின் மறைவிற்கு மூன்றாண்டுகளுக்குப் பின்னர் தமிழ்நாடு கம்யூனிசுடு கட்சி (மா.இலெ.) என்ற பெயரில் கட்சி அமைப்பையும் தமிழ்நாடு விடுதலைப் படை என்ற படையமைப்பையும் தோற்றுவித்து இயங்கி வரலானார். அவரின் தமிழ்நாடு கம்யூனிசுடு கட்சியின் தலைமையிலான படையமைப்பாகத் தமிழ்நாடு விடுதலைப் படை விளங்கிய போது அதன் படைத்தலைமைப் பொறுப்பை ஏற்றுத் திறம்படச் செயலாற்றியவர் தோழர் தெய்வ. இலெனின் ஆவார். (தோழர் சுந்தரம் தலைமையிலான கட்சியின் படைத்தலைமை

ஏற்றவரெனத் தோழர் தமிழரசனைச் சுட்டி சில வரலாற்றறிஞர்கள்
கூறி வருவது கருதத் தக்கது.)

இப்படி தோழர் தமிழரசன் என்ற பெயரையோ, உருவத்தையோ காண நேர்ந்தால் பொன்பரப்பியில் உடன் இருந்த தோழர்கள் மட்டுமல்லாமல் வழி நடத்தி கட்சிப் பெயர் கொடுத்த ஆசான் புலவர், படைப்பெயர் சூட்டிய தோழர் வேலு, இறப்பிற்குப் பின்னரும் அவர்கள் தாங்கிய கருவியைச் சுமந்த தோழர்கள் சுதந்தரம், இலெனின் ஆகியோரெல்லாம் நினைவிற்கு வருவதாலேயே **தமிழரசன் என்ற பெயர் தனியாள் பெயரன்று; வரலாற்று இயக்கத்தின் பெயர் என்று கூறுகிறோம்.**
எங்கெங்கெல்லாம் தமிழரசன் பெயர் பலுக்கப்படுகிறதோ அங்கெல்லாம்

புலவர் உள்ளிட்ட பெருமக்களின் பெயர் பலுக்கப் பெறுவதாகவே உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

இந்த வரலாற்றியக்கத்தை எதிரிகள் குமுகக்கேடர்கள் *(சமூக விரோதிகள்)*, மக்கள் பகைவர்கள் என்றெல்லாம் பழி தூற்றிக் கொண்டிருக்கின்றனர். தமிழ்த்தேசியம் பேசுகின்ற சிலரும் தோழர் தமிழரசன் அவர்களின் நடைவழியை 'சீர்குலைவிய அழித்தொழிப்பு' என்று கருதி ஏற்க மறுக்கின்றனர்.

அவ்வாறு திறனாய்கின்ற தோழர் செல்வமணியன் அவர்கள், தம் கட்டுரை ஒன்றில்,

**“தனிநாடாக்குதல் எனும் கோரிக்கை நாடுகளுக்கிடையே எழும் போட்டிகளில், தங்களுடைய தனியுரிமைகளை நிலை நாட்டிக் காத்துக் கொள்ள முதலாளிகளால் எழுப்பபப்படுவதாகும். மாறாக,**

**‘தமிழக விடுதலை’ எனும் கோரிக்கையோ உலக அளவில் நாட்டினங்களுக்குரிய (தேசிய இனங்களுக்குரிய) பொது உரிமையாகிய தன் தீர்வு உரிமையைத் தமிழக மக்கள் பெற பாட்டாளிகளால் எழுப்பப்படுவதாகும்.**

**தனிநாடாக்கும் கோரிக்கை உலக அளவில் தமிழர்களைத் தனிமைப் படுத்துவதை மேற்கொள்கிறது. அது தமிழர்களைப் பிற இன மக்களுக்கு எதிரிகளாக்கி நிறுத்துவதில் போய் முடிகிறது. ஆனால் விடுதலைக் கோரிக்கை தமிழர்களை உலக மக்களின் உரிமைப் போராட்டத்துடன் ஒன்றிணைக்கிறது. அது உரிமைகளைப் பொதுமையாக மாற்றுகிறது.”**

என்று கூறி, தமிழ்நாடு விடுதலைப் படையின் சுவரொட்டிகளின் முழக்கமான ‘தமிழ்நாட்டைப் பாட்டாளிகள் தலைமையில் விடுதலை செய்வோம்’ என்பதையும் மா.இலெ. அமைப்புக் குழுவின் ‘தமிழ்நாட்டை

தனிநாடாக்குவதே நமது கொள்கை இலக்கு' என்பதையும் ஒப்பிட்டு முரண்பட்டுள்ள இந்த முழக்கங்களால் கட்சிக்குள் ஓர் ஊசலாட்டம் இருப்பதைக் காணலாம் என்று கூறுகிறார். இம்முழக்கங்களில் எந்த ஊசலாட்டமும் இல்லை என்பதே உண்மை. அவர் குறிப்பிடுவதைப் போன்று விடுதலைக் கோரிக்கை  தமிழர்களை உலக மக்களின் உரிமைப் போராட்டத்துடன் ஒன்றிணைக்கிறது என்பது உண்மையே.

அவ்வொன்றிணைப்பின் வெளிப்பாடுதான் பஞ்சாப்பு, காசுமீர், நாகா, மிசோரம் போன்ற நாடுகளின் விடுதலைக் கோரிக்கைகளை ஏற்று ஆதரிக்கின்ற தமிழ்நாடு விடுதலைப் படையின் முழக்கமாகும். இந்த முழக்கம் அந்தந்த இனங்களை தமிழ்நாட்டு விடுதலையின்பால் அக்கறை கொள்ளச் செய்யும் என்பதும் வெளிப்படை.

அதே நேரத்தில் தனிநாடாக்குவது என்பது முதலாளிகளின் முழக்கம். அதனால்தான் அது தனிமைப்பட்டு மாநிலத் தன்னாட்சியாக மாறிவிட்டது என்பதாகத் தோழர் செல்வமணியன் அவர்கள் கூறுவது முழு உண்மையன்று. முதலாளிகளால் எழுப்பப்பெற்ற தனிநாட்டு முழக்கம் மாநிலத் தன்னாட்சியாகச் சுருங்கிப் போனது என்பது பகுதி உண்மையாகும்.

ஆனால் அம்முழக்கம் பாட்டாளிகளின் குரல்வளையிலிருந்து எழுப்பப்பெறும் போது அது தன்தீர்வுரிமையாகத்தான் வெளிப்படும். தன்தீர்வுரிமை என்பது பிரிந்து போவது என்பதையும் உள்ளடக்கியது என்பதை மார்க்சியப் பேராசான்கள் பலமுறை உரைத்துச் சென்றதை தோழர் அறியாதவர் அல்லர். அத்தன்தீர்வுரிமையின் அடிப்படையிலேயே தமிழ்நாட்டைத்

தனிநாடாக்குவது நம் கொள்கை என்று கட்சி அறிவித்துள்ளது என்பதால் ஊசலாட்டம் ஏதுமின்றி தெள்ளத் தெளிவாக கட்சி முடிவெடுத்துள்ளது என்பதையும், அம்முடிவின்படி பிற தேசிய இனப் பாட்டாளிகளைத் தம்பால் ஈர்க்கின்றவண்ணம் தமிழ்நாடு விடுதலைப்படை முழக்கங்களை வெளிப்படுத்தியது என்பதையும் விடுதலைப் படையின் முழக்கங்களைத் தொடர்ந்து கவனித்து வருவோர் அறிவர்.

மேலும், அவர் தமிழ்நாடு விடுதலைப் படை செய்ய வேண்டுவன என சிலவற்றைச் சொல்லி அவற்றுள் சிறப்பாக,

**இந்தியா ஒரு போர் அரங்கமாகத் தில்லியரசால் மாற்றப் பட்டு வருவதை எதிர்த்து மக்கள் விடுதலைப் போரை முன்னெடுக்கும் புரட்சிகர வன்முறைப் போராட்டத்தை முன்னெடுத்திருக்க வேண்டும். அதை உழைக்கும் மக்களின் அரசியல் அதிகாரத்தை**

**வென்றெடுக்கும் கருவியேந்திய மக்கள் போராட்டமாக மலர்ச்சியுறச் செய்திருக்க வேண்டும்.**

என்று அறிவுரை கூறுகின்றார்.

மகிழ்ச்சி. இதைத்தான் தமிழ்நாடு பொதுவுடைமைக் கட்சி (மா.இலெ.)யும், தமிழ்நாடு விடுதலைப் படையும் செய்ததாக நாங்கள் உணர்கின்றோம். வாயளவில் போர், போராட்டம் என்றெல்லாம் பேசிக் கொண்டிராமல் இப்படி எல்லாம் செய்ய இயலும் என்பதை எம் மக்களுக்கு அறிவுறுத்துகின்ற அடிப்படைப் பாடங்களாக தமிழ்நாடு விடுதலைப்படையின் செயல்களை நாங்கள் கண்டோம். திடுமென மக்கள் அரசுக்கெதிராக கருவியேந்திய வன்முறைப் போரை நடத்துவார்கள் என்று எப்படி கருத முடியும். மக்களை அரசியல் படுத்துகின்ற சூழலிலேயே கருவிப் போருக்கும் தக்கவர்களாக மாற்ற வேண்டியது

ஒரு விடுதலைப் படையின் கடமையாகும். அந்தக் கடமையில் எள்ளளவும் பின்வாங்காது கடமையாற்றியது தோழர் தமிழரசன் அவர்கள் கட்டிய தமிழ்நாடு விடுதலைப் படையாகும்.

'புரட்சிக்கான எழுச்சியை ஒரு கலையாகப் பயில்தல் வேண்டும்' என்ற கார்ல் மார்க்சின் வழியில்தான் பயின்று கொண்டிருக்கிறது தமிழ்நாடு விடுதலைப் படை. அந்த எழுச்சியைத் தமிழகம் கண்டு கொண்டிருக்கிறது. தமிழரசனின் பாதையில் தொடர்ந்து செல்வோம் என்ற முழக்கம் இன்று பல்லாயிரக்கணக்கான இளைஞர்களின் உள்ளங்களில் எழுப்பப்பட்டுக் கொண்டிருக்கிறது. அது சீர்குலைவியமன்று; விடுதலைப் போராட்டம் என்பதை நாளைய வரலாறு மெய்ப்பிக்கும்.

**அப்போது தமிழரசன் என்ற பெயருக்குள் தமிழ்நாடே அடங்கித் தெரியும்.**

# தமிழ்நாட்டு விடுதலைக்குப் போராடி உயிர்நீத்த மாவீரர்களுக்கு வீரவணக்கம்!

செப்டம்பர்-1

## தமிழ்த்தேசிய தியாகிகளுக்கு வீரவணக்கம்!



தோழர்.தர்மலிங்கம்





தோழர்.அன்பழகன்



தோழர்.பழனிவேல்



தோழர்.செகநாதன்

தமிழர் கழகம் - தமிழ்நாடு